பத்தே நிமிடத்தில்

# பரமன் பூஜை



ஸ்ரீ தாயுமான சுவாமி ஸ்ரீ மட்டுவார் குழலம்மை

## மஹா சிவராத்திரி விழா மலர்

நாள் : மாசி மாதம் 27-ஆம் தேதி (11-03-2021)

வியாழக்கிழமை

வெளியீடு :

வேதாகம அகாதமி, இலண்டன்

[கிளை - திருச்சி]

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## பத்தே நிமிடத்தில்

# பரமன் பூஜை



## மஹா சிவராத்திரி விழா மலர்

வெளியீடு :

# வேதாகம அகாதமி

## இலண்டன்

(கிளை - திருச்சி)



சிவபூஜை, க்ஷணிகலிங்கம், உடையவர் எழுந்தருளச் செய்துகொண்டு பூஜிப்பது ஆக இருவிதம். இரண்டுமே ஸௌராதி, சண்டபர்யந்தம்" என்ற முறைப்படி செய்யவேண்டும்.

பூஜைக்கு வேண்டிய சாதனங்கள் விபூதி, ருத்ராக்ஷம். சந்தனம், சுத்த அக்ஷதை, மணி, பஞ்சபாத்ரம், உத்தாணி. கிண்ண ங்கள் 3, அபிஷேக வேதிகை 1, செம்பு தம்பாளம் 1 கற்பூரத்தட்டு 1. சூரிய பூஜைக்கு தாமிரக் கிண்ணம் சிறியது 1, அஷ்டதளயந்திரம் போட்ட சிறிய தாமிரத்தட்டு 1. தீபம் 1 பலகை, ஆஸனம் 1 சுகந்தமான ஊதுபத்தி, கற்பூரம் தசாங்கம், சாம்பிராணி மட்டிப்பால் குங்குமம், ஜ

அன்னவகைகள், பக்ஷ்ய வகைகள், ஹவிஸ் தேங்காய், பழம்.
வெத்திலைபாக்கு பழ வகைகள் கற்கண்டு திராக்ஷைப் பழம், பேரீச்சம்பழம் இவைகளில் ஏதேனும் ஒன்று நிவேதனமாக வைத்துக்கொள்ளலாம்.

சிவபூஜைக்கு வேண்டிய மேலேகண்ட சாமான்களை முன்னமேயே தயார் செய்து வைத்துக்கொண்டும், பூஜை செய்பவர்களை பார்த்தும் தெரிந்துகொள்ள வேண்டியது.

கணபதயே நம: குரவே நம : என்று வந்தனம் செய்து கொள்ளவேண்டியது

ஆசமநீயம்.

ஓம் ஹாம் ஆத்மதத்வாய ஸ்வதா

ஓம் ஹாம்வித்யாதத்வாயஸ்வதா

ஓம் ஹாம் சிவதத்வாய ஸ்வதா

என்று ஆசமநீயம் செய்து, ஸகளீகரணம் செய்துகொள்ள வேண்டியது. (குருமுகம் அறியவும்)

சுக்லாம்பரதரம், விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புறம் பிரஸன்னவதனம் த்யாயேத், ஸர்வ விக்ன உபசாந்தயே, என்று தலையில் ஐந்து முறை குட்டிக்கொள்ள வேண்டியது பிராணாயாமம் செய்ய வேண்டியது. (குருமுகமாக தெளிதல் முக்யம்)

மமோபாக்தஸமஸ்த துரித க்ஷயத்வாரா ஸ்ரீ பரமேச்வர ப்ரீயத்தர்த்தம் ஸமஸ்த மங்கள அவாப்யரத்தம் ஆன்மார்த்த, சிவாராதனம் கரிஷ்யே, என்று ஸங்கல்பம் செய்துகொள்ளவேண்டியது.

## பத்தே நிமிடத்தில் பரமன் பூஜை

சூரியபூஜை

தாமிரக்கிண்ணத்தில் அஸ்த்ராய நம : என்று கழுவி நீர் நிரப்பி கஷோல்காய சிவசூர்யமூர்த்தயே ஸ்வாஹா என்று அர்க்யம் கொடுத்து திரும்ப நீர் நிரப்பி சிவசூர்யாய நம: என்று புஷ்பம் சேர்த்து தேனுமுத்ரை காட்டி அந்த நீர்த்தத் தால் தன்னையும் ஸூரிய பூஜா திரவியங்களிலும் சிவ யந்திரத்திலும் தெளித்து

அர்க்காஸனாய நம;

கஷோல்காய அர்க்க மூர்த்தயே நம :

ஓம் ஹ்ராம்ஹ்ரீம் ஸஹ சிவஸூர்யாய நம :

என்று பத்ரபுஷ்பம் சாத்தி ஆவாஹனஸ்தாபனம் செய்து தூப, தீபம் காட்டி ஓம் ஹ்ராம்ஹ்ரீம் ஸஹசிவஸூர்யாய ஸ்வாஹா என்று அர்க்யம் கொடுத்தும் வடக்கில் உஷாதேவ்யை நம: என்று பத்ரம் சாத்தியும், தெற்கில் ப்ரத்யுஷாதேவ்யை நம : என்று புஷ்பம் சாத்தியும் உஷா ப்ரத்யுஷாஸஹித கஷோல்காய சிவசூர்யமூர்த்தயே நம : என்று தூப தீபம் காட்டியும் யந்திரத்துக்குமுன் ஸோமாதி ஸமஸ்தபரிவாரதேவதாப்யோ நம : என்றும் புஷ்பம் சாத்தியும் தூபம் தீபம் காட்டியும் நிவேதனம் கற்ப்பூரம் செய்து மந்திர புஷ்பம் சாத்தி வணங்க வேண்டியது.

மூலமந்திரத்தால் 11 தவணை செபம் செய்து கஷோல்காய சிவசூரியமூர்த்தயே நம : வரதஹஸ்தே நிவேதயேத் என்று அக்ஷதை புஷ்பம் அர்க்யம் இவைகளை யந்திரத்தில் சேர்க்கவேண்டியது. ஆரோக்யம் தரவேண்டுமென்று பிரார்த்திக்க வேண்டியது.

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸஹசிவஸர்யாய ஸ்வாஹா என்று ஒரு கரண்டி தீர்த்தம் கொடுத்து ஹ்ருதயத்தில் ஒடுக்கிக்கொள்ளவேண்டியது.

ஒரு பத்ரத்தில் சந்தனம் அதை வைத்து தேஜஸ்சண்டாஸனாய நம: தேஜஸ் சண்டமூர்த்தயே நம: தேஜஸ் சண்டாய நம என்று பத்ரம் சாத்தி. சூரியபூஜை செய்த புஷ்பங்களையும் சாத்தி ஆவாஹனம் செய்து பூஜை செய்த நிவேதனத்தை நிவேதனம் செய்து $$செய்து சூரியபூஜை செய்த பலன் கிடைக்க வேண்டுமென் பிரார்த்தித்து கையை மூன்று முறை தட்டி, தேஜஸ் சண்டாய ஸ்வாஹா என்று அர்க்யம் கொடுத்து ஹ்ருதயத்தில் கொள்ள வேண்டியது.

சூரியபூஜைக்குப் பிறகு சிவ பூஜைசெய்ய வேண்டியது.

ஆசமநீயம் செய்து, கரன்யாஸம்கொண்டு. சிவபூஜை தொடங்கவேண்டியது.

முதல் கிண்ண த்தில் அஸ்த்ராய நம: என்று கழுவி நீர் நிரப்பி ஓம் என்னும் மந்திரத்தால் 7 தடவை அர்ச்சித்து. வலக்கையினால் மூடி ஓம் என்னும் மந்திரத்தால் 7 தடவை அபிமந்திரித்து, ரக்ஷாவகுண்டனம் செய்து தேனு முத்ரை காட்டி அந்த நீரால் ஸாமான்யர்க்ய ஜலேன, அஸ்த்ராய, ஸம்புரோக்ஷ்ய என்று தனது சிரசில் தெளித்து பூஜை திரவியங்களிலும் தெளிக்க வேண்டியது.

ஒரு புஷ்பம் எடுத்து, "பஸ்சிமத்வாரே" ஸமஸ்ததேவ் தாப்யோ நம: என்று சாத்தி த்வாரதேவதாப்யஸ்வாஹா என்று அர்க்யம் கொடுக்கவேண்டியது.

ஒரு புஷ்பம் எடுத்து ஓம் ஹ்லாம் என்று நாபியிலிருந்து வலது கையில் தொடங்கி, சிரசுக்குப்பின்னே போடவேண்டி யது. சரீரசுத்தியாகி மனதுக்குள்ளே சிவபெருமாளைப் பூஜித்தது போல பாவிக்க வேண்டியது.

மற்றொரு கிண்ணத்தில் நீர் நிரப்பி சிவாஸயை நம: சிவமூர்த்தயே நம: சிவாய நம: என்று புஷ்பம் சேர்த்து ரக்ஷாவ குண்டனம் தேனுமுத்ரை காட்டி சிரஸில் தெளித்துக் கொள்ளவேண்டியது. மற்றைய கிண்ணத்திலும் நீர் நிரப்பி சந்தனம் அக்ஷதை சேர்த்து சிவாஸனாய நம:

சிவமூர்த்தயே நம:

சிவாய நம:

ஈசானாய நம:

தத்புருஷாய நம:

அகோராய நம:

வாமதேவாய நம: ஸத்யோஜாதாய நம: என்று புஷ்பார்ச்சனை செய்தும், வலது கையால் மூடி, மந்திரத் கால் அபிமந்திரித்து தேனு முத்ரை காட்டி தன் சிரஸிலும்

பூஜா திரவியங்களிலும் தெளித்து அபிஷேக தீர்த்தத்திலும் சேர்க்கவேண்டியது.

நெற்றியிலே சந்தனம் குங்குமம் வைத்துக்கொண்டு கையில் ஒருபுஷ்பம் வைத்துக்கொண்டு, காலடியில் சிவாஸனாய ஹ்ருதயத்தில் சிவமூர்த்தயே நம: சிரஸில் சிவாய நம:

என்று புஷ்பத்தால் அர்ச்சித்து அகத்திலே சிவபூஜை செய்து வெளியிலே சிவபூஜை செய்ய

அனுமதி தரவேண்டுமென்று சிவபெருமானை பிரார்த்தித்து பஞ்சபிரம்ம ஷடங்க மந்திரங்களை மனதிலே உச்சரித்து சிவபெருமானுடைய பெட்டகத்தின் மேலே

பீமாய நம: ருத்ராய என்று இரு புஷ்பத்தாலே பூஜிக்கவும்.

அபிஷேக வேதிகையிலே ஸ்வாமியை எடுத்து வைத்து நிர்மால்யம் எடுத்து தனக்கு ஈசான்ய திக்கிலே வைத்து சிவ காயத்ரியினாலே நியாஸம் செய்து தூபம் தீபம் காட்டி அர்க்யம் கொடுத்து ஸாமான்ய அர்க்யத்தாலே அபிஷேகம் செய்து திரவியப்பொடி சுகந்த தைலம் சீயக்காய் மாப்பொடி இவைகளால் அபிஷேகம் செய்து பால் முதலிய திரவியங்களாலும் அபிஷேகம் செய்து கடைசியாக விசேஷ அர்க்யத்தால் அபிஷேகம் செய்து நன்கு துடைத்து, விபூதி, சந்தனம், அக்ஷதை, அறுகு, பில்வம் இவைகள் சாத்தி சுவாமியை பீடத்தில் எழுந்தருளச் செய்யவேண்டியது.

சுவாமிக்கு வடபக்கத்திலே கணேச, கமல, ஸதாசிவாதி குருபாதுகேப்யோ நம; என்று ஒரு புஷ்பம் வைத்து அர்க்யம் கொடுக்கவேண்டியது சுவாமிக்குத் தென் பக்கத்திலே ஓம். கம் கணபதயே நம: என்று புஷ்பம் சாத்தவேண்டியது. அர்க்யம் கொடுக்கவும் சுவாமிக்கு வடபக்கத்திலே ஓம் ஸாம் ஸ்கந்தாய நம: என்று புஷ்பம் வைத்து ஒரு அர்க்யம் கொடுக்கவேண்டியது.

சுவாமியைச் சுற்றி

ஆதார சக்தயே நம: அனந்தாய நம: தர்மாய நம: க்ஞானய நம: வைராக்யாய நம: ஐஸ்வர்யாய நம: பத்மாய நம: என்று அர்ச்சித்து பத்மஸ்ய உபரி. சுவாமிக்கு அர்ச்சிக்க வேண்டியது.

ஓம் ஹாம். சிவாஸனாய நம:

ஓம் ஹாம் சிவமூர்த்த யே நம:

ஓம் சிவாய நம:

ஓம் ஹாம் ஈசான மூர்த்தாய நம: ஓம் ஹாம் தத்புருஷவக்த்ராய நம: ஓம் ஹாம், அகோரஹ்ருதயாய நம: ஓம் ஹாம், வாமதேவகுஹ் யாய நம: ஓம் ஹாம், ஸத்யோஜாத பாதாய நம:

ஓம் ஹாம் ஹ்ருதயாய நம:

ஓம் ஹாம், சிரஸே நம:

ஓம் ஹாம் சிகாயை நம:

ஓம் ஹாம் கவசாய நம:

ஓம் ஹாம். நேத்ரேப்யோ நம:

ஓம் ஹாம், ஹ:அஸ்த்ராய நம:

ஓம் ஹாம், வித்யாதேஹாய, என்று அர்ச்சித்து எங்கும் நிறைந்த சிவமே இங்கு எழுந் தருளப் பெறவேண்டுமென்று பிரார்த்தித்து எல்லாம் வல்ல சிவபெருமான் நம் பிரார்த்தளைக்கிணங்க இங்கு எழுந்தருளியதாகப் பாவித்து ஸ்வாமின்ஸர்வ ஜகன்னாத யாவத்பூஜாவஸானகம், தாவத்வம் ப்ரீதிபாவேந லிங்கேஸ்மின் ஸன்னிதிர் பவ, என்று ஆவாஹனம் செய்து

தேனு முத்ரை காட்டி, சிவாய நம: என்று 2 தரமும், சிவாயஸ்வதா என்று 3 தாமும் சிவாயஸ்வாஹா என்று 1 தரமும் அர்க்யம் கொடுக்க வேண்டியது.

ஓம் ஹாம், சிவாஸனாய நம:

சிவமூர்த்த யே நம: சிவாய நம:

பவாய தேவாய நம: சர்வாயதேவாய நம:

ஈசாநாய தேவாய நம;

பசுபதயே நம:

ருத்ராய தேவாய நம:

உக்ராய தேவாய நம: .

பீமாய தேவாய நம:

மஹாதே. தேவாய நம:

என்று அஷ்ட புஷ்பம் சாத்தி அக்ஷதை அறுகு இவைகளால் ஓம் ஹாம், ஆத்மதத்வாய நம:

ஓம் ஹாம். வித்யாதத்வாய நம: ஓம் ஹாம் சிவதத்வாய நம: என்று மூன்று முறை அர்ச்சித்து அர்க்யம் கொடுக்கவும்.

மஹாலிங்கத்தின் கோமுகீபகுதியில் சந்தனம், அக்ஷதை வைத்து ஓம்ஸ்ரீம், ஹ்ரீம் கௌர்யாஸனாம தம: ஓம்ஸ்ரீம். ஹ்ரீம் கௌரிமூர்த்தயே நம: ஓம்ஸ்ரீம், ஹ்ரீம் கௌர்யை நம: என்று புஷ்பம் சாத்தி, ஸ்ரீ அம்பாளை சுவாமியுடன் பீடத்தில் எழுந்தருளியிருக்க வேண்டுமாறு பிரார்த்திக்கவும்.

தூபம், தீபம், நிவேதனம் செய்து, தீபாராதனை செய்து அர்க்யம் கொடுத்து நம் குடும்பத்தோடு குறைவற வாழ வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்ளவேண்டியது. புஷ்பங்களால் மந்த்ர புஷ்பம், ஸ்வர்ண புஷ்பம் சாத்த வேண்டியது. ஷோடசோபசாரங்கள் செய்ததாகப் பாவித்து புஷ்பம் சாத்தவேண்டியது.

குருமுகமாக உபதேசம் பெற்று மூலமந்திரத்தை, 11 தடவை ஜெபம் செய்து சுவாமியின் - வரதகரத்தில் சேர்க்கவும். உங்களும் ஜெபம் செய்து சுவாமியின் வரத கரத்தில் குருபாதுகேப்யோ நம: என்று சுவாமிக்கு முன் புஷ்பம் சாத்தவும். சுவாமிக்குப் பின் பகுதியில் வித்யாபீட தேவதாப்யோ நம: யோகபீட தேவதாப்யோ நம: எனது சுவாமிக்குப் பின்னாலே புஷ்பம் சாத்தவும். அர்க்யம் கொடுக்கவும். ஸ்வாமிக்குத் தோத்திரம் சொல்லி வணங்கவும்.

பங்கயம் ஆயிரம் பூவினிலோர் பூக்குறைய

தங்கண் இடந்தரன்சேவடிமேல் சாத்தலுமே

சங்கரன், எம்பிரான் சக்கரம் மாலுக்கு அருளியவாறு

எங்கும் பரவி நாம், தோனோக்கமாட்டாமோ.

(திருவாசகம்)

அக்னிகார்யம் ஸமர்ப்பயாமி என்று புஷ்பம் சாத்தவும். ஸமஸ்தகால பூஜாம் ஸமர்ப்பயாமி

என்றும் புஷ்பம் சாத்தி இரண்டுக்கும் அர்க்யம் கொடுக்கவும்.

உன் அருளால், உன்னைப் பூஜித்தேன் என்று. பிரார்த் திக்கவும்.

ஆயுள் பலம். செல்வம் எல்லாம் அருள வேண்டும் என்றும் பிரார்த்திக்கவும்.

இரண்டு கையிலும், புஷ்பங்கள் வைத்துக்கொண்டு எல்லாத்தேவர்களையும் சிவபெருமானோடு ஒடுக்கிவிட விசேஷ அர்க்யத்திலிருந்து மூலமந்திரம் சொல்லி பராங்முகார்க்யம் கொடுத்து இறைவனைத்தன் ஹ்ருதயத்தில் ஒடுக்கிக் கொள்ளவும்.

சண்டிகேஸ்வர பூஜை

அபிஷேக வேதிகையிலே சந்தனம் அக்ஷதை வைத்து அர்க்யத்தால் அஸ்த்ராய நம : என்று புரோக்ஷித்து

த்வனிசண்டாஸனாய நம : த்வனிசண்ட மூர்த்தயே நம : த்வனி சண்டாய நம : என்று புஷ்பம் அர்ச்சித்து ஆவாஹனாதிகள் செய்து அர்க்யம் கொடுத்து முதல் நாள் சிவபெருமானுக்குப் பூஜித்து நிர்மால்ய புஷ்பங்களைச் சாத்தி, தூபம், தீபம் கொடுத்து சுவாமிக்கு நிவேதித்த நிவேதனத்தை ஆறில் ஒரு பங்கு சண்டிகேஸ்வரருக்கு நிவேதித்து கர்ப்பூரம் செய்து வணங்கவும். இரு கையினாலும் தட்டி தாளத்ரயம் செய்து,

சண்டிகேசமஹாபாக, சிவத்யான பராயண!!

சிவபூஜாபலம்தேஹி த்வனிசண்ட நமோஸ்துதே !!

என்று பிரார்த்தித்து புஷ்பம் சாத்தி, த்வனி சண்டாய ஸ்வாஹா என்று பராங்முகார்க்யம் கொடுத்து ஹ்ருதயத்தில் ஒடுக்கிக்கொள்ளவும். ஆசமனீயம் செய்து கரன்யாஸம் செய்து, அகோரஹ்ருதயாய நம: என்று மூன்று தரம் ஜபித்து அபிஷேக தீர்த்தத்தை

அகாலமிருக்யுஹரணம்,

ஸர்வ வியாதி நிவாரணம் ஸமஸ்தபாபக்ஷயகரம், மஹாதேவ பாதோதகம் சுபகரம்

சுபம்

என்று தீர்த்தம் சாப்பீட்டு திருநீறணியவும்.

சிவாய நம என்று சிந்தித்திருக்கவும்.